# தாமஸ் எடிசன்

ஸேடில்பேக் கிராஃபிக் பயோகிராபிஸ்

தமிழில்: குமரேசன் முருகானந்தம்





அவர்கள் அவரை மெல்நோ பார்க் நகரின் மந்திரவாதி என்று அழைத்தனர். அவர் மின்சார மாயாஜாலம் மற்றும் தனது கடின உழைப்பின் மூலம் இருளை வெளிச்சமாக்கினார், இயந்திரத்தை பேச வைத்தார், சித்திரங்களை உயிற்பித்தார்.


டாம் எடிசன் குடும்பம் மற்ற குடும்பங்களைப் போல் நடந்து கொண்டதில்லை. 1837 இல் அவரது தந்தை கனடா அரசாங்கத்திற்கு எதிராக கிளர்ச்சியில் ஈடுபட்டார்.
நான் ஓர் துரோகி என்று அறிவிக்கப்பட்டுள்ளேன். அரசரின் படை வீரர்கள் என்னைப் பின்தொடர்கிறார்கள்!
ஓ, சாம்! நீங்கள் என்ன செய்வீர்கள்?


எல்லைக்கு ஓட வேண்டும் மற்றவர்களைவிட என்னால் வேகமாக ஓட முடியும்!


வீரர்களும், நாய்களும் விரட்ட அவர் இரண்டு நாட்கள் ஓடினார்.


பின்னர், அவர் உறைந்த ஆற்றைச் சறுக்கியவாறு கடந்து பாதுகாப்பாக அமெரிக்காவை அடைந்தார்.


அவர் ஓஹியோவில் மிலனில் குடியேறி, தனது குடும்பத்தை வரவமை
எவ்வளவு அழகான வீடு!
நான் ஒரு மரக்கடை நடத்தி வருக்கிறேன். வியாபாரம் நன்றாகவே நடக்கிறது.


அங்கு, பிப்ரவரி11, 1847 அன்று தாமஸ் ஆல்வா எடிசன் பிறந்தார்.
உங்கள் மனைவி நலமாக இருக்கிறார், உங்களுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்திருக்கிறது.
கடவுளுக்கே நன்றி! நாங்கள் எங்கள் இளையவர்கள் மூவரை இழந்தோம். நான்சி ஒரு குழந்தைக்காக ஏங்கியிருந்தாள்.


அவனுக்கு தலை பெரியதாக இருக்கிறது! அவன் சரியாக வளர்ந்துவிடுவானா?
முட்டாள்தனம்! அவன் சரியாகத்தான் இருக்கிறான். அவனை என்னிடத்தில் கொடுங்கள்.
அவனுடைய அம்மா எப்போதும் அவனையே தாங்கு தாங்கென்று தாங்குகிறாள்.


பின்னர் அவர் குடும்பம் மிச்சிகனின், போர்ட் ஹுரன் நகருக்கு குடிபெயர்ந்தது.
டாம் உனக்கு எட்டு வயதாகிவிட்டது. நீ பள்ளி படிப்பைத் துவங்க வேண்டிய நேரம் இது.
நான் அதை விரும்புவேன் என்று நினைக்கிறேன்.



ஆனால் அவன் அதை விரும்பவில்லை. மூன்று மாதங்களுக்குப் பிறகு, ஒரு நாள் அவன் வீட்டுக்கு ஓடி வந்துவிட்டான்.
நான் இனி எப்போதும் அந்த பள்ளிக்குப் போகப்போவதில்லை! நான் ஒரு முட்டாள் மற்றும் என்னால் எதுவும் கற்க முடியாது என்று ஆசிரியர் சொல்லக் கேட்டேன்.




அவர் ஏன்அப்படி சொல்ல வேண்டும்?
வெறுதே மனப்பாடம் செய்வதற்கு பதிலாக, அறிந்துகொள்ள விரும்புகிறேன். ஏன் என்று கேள்வி எழுப்புகிறேன், அதனால் தான் இருக்கும் என்று நான் நினைக்கிறேன்.




டாமின் தாயார் ஆசிரியரைக் காணச் சென்றார்.
நானும் ஒரு ஆசிரியைதான். டாம் ஒரு புத்திசாலியான பையன் என்று நான் அறிவேன். உங்களால் அவனுக்கு கற்பிக்க இயலவில்லையெனில், உங்கள் முறைமைகளால் முடியும் என்று நான் கருதவில்லை.
ஆனால் திருமதி எடிசன்...




டாம் அதன் பின் பள்ளிக்கு சென்றதில்லை. அவனது தாயார் தினந்தோறும் அவனுக்குக் கற்பித்தார்
இன்று நாம் வில்லியம் ஷேக்ஸ்பியரின், மெர்செண்ட் ஆஃப் வெனிஸ் படிக்கப்போகிறோம்.
அம்மா, மெர்செண்ட் என்றால் என்ன? வெனிஸ் எங்கிருக்கிறது




சரி, டாம், உனக்கு புரியவில்லை என்றால் எப்போதும் ‘ஏன்’ என்று கேட்க வேண்டும். அதுவே கற்பதற்கு சரியான வழி.

என்னிடம் உனக்காக ஒரு புதிய புத்தகம் இருக்கிறது. உன்னால் அதன் தலைப்பை வாசிக்க முடிகிறதா?

பின்னர் ஒரு நாள்...

D-I-C-T-I-O-N-A-R-Y டிக்ஷ்னரி! டிக்ஷ்ணரி ஆஃப் சயின்ஸ்! (அறிவியல் அகராதி!)

அவனுக்கு அந்த புதிய புத்தகம் பிடித்திருந்தது.

எனக்கு அறிவியல் பிடித்திருந்தது. எனக்கு ஒரு ஆய்வகம் வேண்டும் ஒன்றாகக் கலக்கி என்ன நடக்கிறது என்று பார்க்க வேண்டும்.

அது, வேதியியல் அறிவியலின் ஒரு பிரிவு.

அவன் நிலவரையின் ஒரு மூலையில் தனது ஆய்வகத்தை அமைத்தான். அவன் பழைய பாட்டில்களை சேகரித்தான். தனக்கு வேண்டிய பொருட்களை வாங்குவதற்காக சில்லரைகள் அனைத்தையும் சேமித்துவைத்தான்.

இது $H_2O$. அப்படின்னா தண்ணீர்! இது கந்தகம். மேலும், சனிக்கிழமை நான் கொஞ்சம் பாதரசம் வாங்கப் போகிறேன், வெப்பமானி செய்வதற்கு.

தந்திக் கருவி, செய்திகளை அனுப்புவதற்கான ஒரு அருமையான புதிய கண்டுபிடிப்பு. அதை எப்படி செய்வதென்று இந்த புத்தகம் சொல்கிறது.

உன் வீட்டிலிருந்து எனது வீட்டிற்கு நாம் செய்தி அனுப்பலாம்.

நமக்கு
மிகவும்
நீளமான
கடத்தி
தேவைப்ப
டும்.



மின்காப்பிக்
கு
பாட்டில்கள்
உதவும்.



மேலும், நமது
தந்திக் கருவிக்கு
மின் காந்தம்
மற்றும்
மின்கலங்கள்
தேவை.



தெருவின் அந்த பக்கத்திற்கு
கொண்டுபோக நாம் இந்த
சிறுபாலம் வழியாக கட்டி
எடுத்துச் செல்வோம்.





அந்த சிறுவர்கள் மோர்ஸ் குறியீட்டைக் (Morse code) கற்று, தட்டித்தட்டி ஒரு வீட்டிலிருந்து மற்றொரு வீட்டிற்கு செய்தி அனுப்பினர்.


விரைவிலேயே ஓர் நற்செய்தி கிடைத்தது
கிராண்ட் டிரங்க் ரயில்வே வேலை முடிந்துவிட்டது. நீங்கள் போர்ட் ஹுரோனிலிருந்து டெட்ராய்ட் வரை பயனிக்கலாம்.
எனக்கு ஒரு வேலை கிக்கலாம்!
ரயில்வேக்கு ரயிலில் செய்தித்தாள்கள், மிட்டாய்கள், சாண்ட்விச்கள் விற்பனை செய்ய ஒரு சிறுவன் தேவைப்பட்டது. டாமுக்கு வேலை கிடைத்துவிட்டது.


தினந்தோறும் காலை 7 மணிக்கு அவன் ரயிலில் இருந்தான்.
ஹலோ டாம்...
ஹலோ மிஸ்டெர் ஸ்டீவன்சன்!


அவன் தன்னிடம் இருக்கும் பொருட்களை பெட்டிகளுக்குள் எடுத்துச் சென்றான்.
செய்தித்தாள்கள், சாண்ட்விச்கள், மிட்டாய்கள் உங்களுக்காக சார்


பின்னர்
இங்கே ஏகப்பட்ட இடம் இருக்கிறது. இதில் என்னுடைய பொருட்களை வைப்பதற்கு பயன்படுத்திக்கொள்ளலாமா?
ஏன் முடியாது?


எனவே, டாம் தனது ஆய்வுக்கூட பொருட்களை பெட்டியினுள் கொண்டு வந்தான்.
இங்கு பரிசோதனைகள் செய்ய எனக்கு நிறைய நேரம் இருக்கும்!

பின்னர் டாம் கைகளால் இயக்கும் ஒரு சிறிய அச்சு எந்திரத்தை வாங்கினான்.

நான் உள்ளூர் செய்திகளை கொண்டிருக்கும் ஒரு சிறிய செய்தித்தாளை அச்சிடுவேன். அதை நான், தி கிராண்ட் டிரங்க் ஹெரால்ட் என்று அழைப்பேன்.

ஒரு பிரதிக்கு எட்டு சென்ட் வீதம் அவனுக்கு விரைவிலேயே நானூறு வாசகர்கள் இருந்தார்கள்

ஒவ்வொரு நாளும் ரயில் டெட்ராய்ட்டில் 10:30 திலிருந்து 4:30 வரை நிற்கும். அந்த நேரத்தில் டாம் டெட்ராய்ட் நூலகத்திற்கு சென்றான்.

அங்கு A லிருந்து Z வரை பதினைந்து அடிக்கு புத்தகங்கள் அடுக்கியிருந்தன. நான் ஒரு வாரத்திற்கு ஒரு அடி நீளத்திற்கான புத்தகங்களை படிப்பேன்.

ஒரு நாள் டாம் தனது ஆய்வகத்தில் வேலை செய்து கொண்டிருக்கையில் ரயில் மோசமான பாதையைக் கடந்தது.

ஓ, கடவுளே! இது கந்தகம்!

அது aபற்றி எரியத்தொடங்கியது

நான் என்ன செய்வேன்? தண்ணீர்!

நடத்துனர் உள்ளே வந்துவிட்டார்!

ஐயம் சாரி! வருந்துகிறேன்!

நானும் தான்! உன்னை உள்ளே பரிசோதனைகள் செய்ய விட்டதற்கு.

Tom kept his job, but that was the end of his train laborator.ம்ம

பின்னர்... பெட்டிகள் சேர்க்கும்வரை இங்கு நடப்பதற்கு சிறிது நேரம் இருக்கும்...

MOUNT CLEMENS

கழண்டு ஓடிவரும் பெட்டியும் ஒரு குழந்தையும்!

ஒண்ணுமில்லை, நான் உன்னை பிடித்துவிட்டேன்!

டாம் தண்டவாளத்திற்காப்பால் உருந்துவிட்டான்.










வாரத்தில் நான்கு இரவுகள் டாம் திரு. மெக்கென்சியோடு வேலை செய்து கற்றுக்கொண்டான். அது அவனது வாள்க்கையின் திருப்புமுனையாக அமைந்தது.




பல வருடங்களுக்கு, டாம் ஒரு நாடோடி போல் நாடு முழுவதையும் கண்டவாறு ஒரு வேலையிலிருந்து மற்றொன்றிற்கு மாறி மாறி பணியாற்றினான்.


அவன் எங்கெங்கு சென்றாலும் தனது மின் சாதனங்கள் அடங்கிய பெட்டியை எடுத்துச்சென்று அங்கு தனது அறையில் ஆய்வுக்கூடத்தை நிறுவினான்.
நீ ஏன் உனக்கு புது உடுப்புகள் வாங்கிக்கக்கூடாது, டாம்?
பணத்தை ஏன் துணிமணிகளில் செலவு செய்யனும்? நான் அதை ஆய்வுக்கூடக்கருவிகள் மற்றும் புத்தகங்கள் வாங்க பயன்படுத்துவேன்!


ஒரு நாள் இரவு நீண்ட நேர பணிக்குப்பின் வீட்டுக்கு புறப்பட்டான்.
நில்! நில்! இல்லையென்றால் சுட்டுவிடுவேன்


அவன் காதுகளை உரசியது போல் சென்ற குண்டின் சத்தத்தையே முதலில் கேட்டான்.
திருடா நில்! உன் கையில் இருக்கும் அந்த பெட்டியை கீழே போடு!
ஆனால், இவை வெறும் புத்தகங்களே. என்னுடைய புத்தகங்கள்!


டாம் பெட்டியைAத் திறந்து காண்பித்தான்.
நான் உரக்க கத்தியபோது நீ ஏன் நிற்கவில்லை? எனது குறி தப்பாமல் இருந்திருந்தால் நீ செத்திருப்பாய்!
நான் குழந்தையாக இருந்தபோதிலிருந்து எனக்குக் காது கேட்க்காது.

அப்படியா!
வருந்துகிறேன்!

ஓ, பரவாயில்லை. அது கவனம் செலுத்த உதவுகிறது. எனக்கு காது கேட்காததால், கேட்காமல் போகும் முட்டாள்தனப் பேச்சுக்களை யோசித்துப்பாருங்கள்.

1869 ல் டாம் நியூயார்க் சென்றான்.

அவர்கள் தந்தி கருவியை பயன்படுத்துகிறார்கள். நான் இங்கு வேலைக்கு முயற்ச்சி செய்வேன்.

GOLD INDICATOR COMPANY










* தகவல் பெறும் தந்திக்கருவி, தானாகவே தகவலை காகிதப்பட்டையில் அச்சிடும்.

டாமுக்கு நல்லதொரு வேலையும் உயர் சம்பளமும் கிடைத்தது. ஆனால் அவன் இரண்டு மாதங்கள் மட்டுமே அங்கு வேலையில் இருந்தான்.

ஐயம் சாரி, ஆனால் என்னிடம் நிறைய புதுப்புது யோசனைகள் இருக்கின்றன. எனது கண்டுபிடிப்புகளுக்காக வேலை செய்ய விரும்புகிறேன்.












டாமும் எப்போதும் அவர்களுடன் வேலை செய்தான். ஆனால், மற்றவர்களைக் காட்டிலும் கூடுதல் நேரம் வேலை செய்தான். அவனோடு பணியாற்றிய பலர் பின்னாளில் பிரசித்திபெற்ற மின்சாரப் பொறியாளர்களாக அறியப்பட்டார்கள் .










ஆகவே மரியா வேலைக்குச் சேர்ந்தாள். மற்றும் டாமால் அவளை உற்றுப்பார்ப் பார்க்காமல் இருக்க முடியவில்லை.
ஓ, மிஸ்டர் எடிசன். நீங்கள் என்னை மிகவும் பதட்டமடையச் செய்கிறீர்கள். என்னால் வேலை செய்ய முடியவில்லை.


உனக்கு என்னைப் பிடித்திருக்கிறதா? நீ என்னை திருமணம் செய்துகொள்வாயா? யோசித்து பார். உன் அம்மாவிடம் பேசு. எனக்கு அடுத்த வாரம் சொல்.


அடுத்த வாரம், டாம், வீட்டிற்கு வர மேரிஅனுமதி கொடுத்தார். 1871 ஆம் ஆண்டு கிறிஸ்துமஸ் தினத்தன்று அவர்கள் திருமணம் செய்துகொண்டனர்.
தாமஸ் ஆல்வா எடிசன், நீ இந்தப் பெண்ணை மணந்து கொள்கிறாயா ...
ஆம்


திருமணத்திற்கு பிறகு,காலை டாம் மேரியை தான் நியூவர்க்கில் புதிதாக வாங்கிய வீட்டிற்கு அழைத்துச் சென்றார்.
சில காரியங்களைப் பற்றி நான் கவலைக்கொள்கிறேன். சிறிது நேரத்திற்கு நான் தொழிற்சாலைக்கு சென்று வருகிறேன்.
ஆனால், டாம்...

அன்று இரவு ...

நீங்கள் இங்கே என்ன செய்கிறீர்கள், டாம்?

ஏன்? என்ன நேரம் இப்போது?

இது நள்ளிரவு!

நான் இப்போது வீட்டிற்கு போவது நல்லது என்று நினைக்கிறேன். எனக்கு இன்று தான் திருமணம் ஆனது

தந்தி மற்றும் தொலைபேசி கருவிகளில் முன்னேற்றங்களை டாம் கண்டுபிடித்தார் அவர் பணம் சம்பாதித்தார். அவர் வழக்குகளை சந்திக்க வேண்டியிருந்தது.

நான் ஒரு நல்ல உற்பத்தியாளர் அல்ல, எனக்கு அது பிடிக்கவில்லை! நான் தொழிற்சாலை விற்றுவிட்டு, புதியனவற்றை கண்டுபிடித்தலில் ஈடுபடப் போகிறேன்.

நீ தான் நான்கு அறிவாய்.

அதனால் டாம் மென்லோ பார்க், நியூ ஜெர்ஸிக்கு இடம்பெயர்ந்தார்.

முதல் மாடியில் எனக்கு அலுவலகம் மற்றும் நூலகம் உள்ளது. இரண்டாவது மாடியில் ஒரு பெரிய ஆய்வக அறை. மற்றும் நாம் வாசிக்க அருகே ஒரு பண்ணை வீடும் வாங்கியுள்ளேன்.



ஒருநாள், எடிசன் சக ஊழியரிடம் பேசினார்.







பின்னர், ஜான் அந்த மாதிரியை மீண்டும் கொண்டுவந்தார்.







**போனோக்ரப்** முற்றிலும் புதிய சிந்தனை. யாரும் இப்படி ஒரு விஷயத்தை இதற்கு முன்னர் சிந்தித்துப் பார்த்தது இல்லை

ஒரே நாளில்,, டாம் எடிசன் புகழ்பெற்றார். இரயில்வே, மென்லோ பார்க் நகருக்கு ஆயிரக்கணக்கான மக்களை சிறப்பு சுற்றுலாவிற்கு அழைத்துச் செல்லும் ரயில்களை இயக்கியது.




வாஷிங்டன்னிலிருந்து தந்தி ஒன்று வந்தது.

அவர்கள் என்னை இந்த ஃபோனோகிராப்பை கொண்டு வந்து வாஷிங்டன்னின் வெள்ளைமாளிகையில் நாடாளுமன்றத்திற்கும் ஜனாதிபதி ஹேயஸ் மற்றும் அவரது மனைவி ஆகியோர்களுக்கு காண்பிக்க விரும்புகிறார்கள்.




ஆனால் எடிசன் தம்பதியர்க்கு நான்கு வயதில் ஒரு பெண் குழந்தை இருந்தது. டாம் அந்த குழந்தையை கிள்ள எத்தனிப்பதைக்கண்டபோது மேரி கோபமடைந்தாள்.

தாமஸ் எடிசன்! நீங்கள் மாரியனை என்ன செய்ய முயற்சி செய்கிறீர்கள்?

சரி, நான் ஒரு குழந்தையின் அழுகையைப் பதிவு செய்ய வேண்டும், அவள் அழவில்லை.




அந்த காலத்தில், வீடுகள் எரிவாயு விளக்குகளால் ஒளிரூட்டபட்டன கிராமப்புற வீடுகளில் மண்ணெண்ணெய் விளக்குகள் மற்றும் மெழுகுவர்த்திகள் பயன்படுத்தப்பட்ட
பிறை விளக்குகளே மின் விளக்குகளின் ஒரே வடிவமாக இருந்தது
பிறை விளக்கு, கண்ணை குருடாக்கும் அதிக வெளிச்சமுள்ள, அதிக வெப்பமான, அதிக விலையுள்ள ஒன்றுமாகும்.


எரிவாயு ஒரு நல்ல ஒளி கொடுக்கும். ஆனால், அது விரும்பத்தகாத மணமும், விலை உயர்ந்ததுமாகும்.


நான் வீட்டு உபயோகத்திற்காக மின்சார விளக்கையும், மேலும் நீராவி சக்தியை மின்சக்தியாக மாற்ற ஒரு வழியையும் உருவாக்கப்போகிறேன்.


பெரும்பாலானோர் இது நடக்காது என்றே கூறினர்.
அந்த பித்துப்பிடித்த டாம் எடிசன் மின்சார விளக்கு செய்ய முடியும் என்று கூறுகிறார்.


அவரோடு பணியாற்றும் சிலரும் நம்பிக்கையிழந்தனர்.
நீயும் 3,000 கோட்பாடுகளை முயற்சித்தாய், கிட்டத்தட்ட இரண்டு ஆண்டுகள் பணிபுரிந்தாய், ஆனாலும் அந்த விளக்குகள் ஐந்து மணிநேரம் கூட எரிவதில்லை!



அக்டோபர் 1879ன் ஓர் இரவில்....
இது கரி இழை ஒரு வெற்றிட குமிழினுள்.
மேலும் இது பத்து மணி நேரமாக எரிந்து கொண்டு தான் இருக்கிறது!
யாரும் வீட்டுக்கு போகவில்லை.. அந்த பல்ப் எரிந்துகொண்டே இருந்தது. அது 45 மணிநேரம் எரிந்தது.




அது 45 மணிநேரம் எரிந்ததெனில், என்னால் அதை 100 மணிநேரம் எரியவைக்க முடியும்! மேலும் ஒரு பல்ப் 40 சென்ட் விலையில் விற்கும் அளவிற்கு மலிவானதாகச் செய்ய முடியும்.




டிசம்பர் மாதம் நியூ யார்க் ஹெரால்ட் பத்திரிக்கை நிருபர் ஒருவருக்கு அதைக் காண்பித்தார்.
NEW YORK HERALD
EDISON'S LIGHT. THE GREAT INVENTOR'S TRIUMPH. IT MAKES LIGHT WITHOUT GAS OR FLAME.
முட்டாள்தனம்! சாத்தியமல்ல!





அவர் புத்தாண்டு தினத்தன்று பொதுமக்களை ஒரு செயல் விளக்கத்திற்கு அழைத்தார். 3,000க்கும் அதிகமானோர் மென்லோ பார்க் வந்தனர்.
இது ஒரு அதிசயம்! இது ஒரு மாயாஜாலம்!
எடிசன் ஒரு வித்தைக்காரன் !


ஆனால், நாம் வீட்டிற்குள் மின்சாரத்தைக் கொண்டுசெல்லாத வரை என் ஒளி விளக்கு யாருக்கும் எவ்வித நன்மையும் தராது.


அதற்கு நாம் எல்லாவற்றைம் அடிப்படையிலிருந்து உருவாக்க வேண்டும். மின் அமைப்புகள், கேபிள்கள், கம்பி, சுவிட்சுகள், உருகிகளும். என்னென்ன வேண்டுமோ அவையனைத்தையும்!


அவர் நியூ யார்க்குக்குச் சென்று, ஐந்தாவது அவென்யூவில் ஒரு கட்டிடத்தை வாடகைக்கு எடுத்தார்.
மின்சக்தியினால் ஒளிரும் ஒரு வீட்டை முன் எப்போதும் கண்டதில்லை. இப்போது அது என்ன செய்ய முடியும் என்பதை அவர்கள் காண்கிறார்கள்.
ஒருங்கிணைந்த (கண்சாலிடேட்டட்) எடிசன் கம்பெனி என்று விளங்கப்போகும் நிறுவனத்தின் பிறப்பிடமாக இது இருந்தது.


எடிசன் தம்பதிகள் இப்போது இரண்டு மகன்களையும் கொண்டிருந்தனர். டாம் குடும்பத்தை நியூ யார்க் வீட்டிற்கு இட்டுச் சென்றார்.
ஆனால், டாம் நாங்கள் உங்களைப் பார்க்க முடிவதில்லையே!
இன்னும் சிறிது காலத்திற்கு நீங்கள் என்னை குறைவாகவேப் பார்ப்பீர்கள்! நான் தொழிற்கூடங்களையும், மின் நிலையங்களையும் தொடங்கப்போகிறேன். நிலதடியில் கேபிள்களை இடவும், அனைத்தையும் வடிவமைக்கவும் போகிறேன்.
மின்சாரம் உற்பத்தி செய்வது மற்றும் விநியோகிப்பது குறித்த 360 சிந்தனைகளுக்கு அவர் காப்புரிமைப் பெற்றார்.


அவர் எப்போதும் போல, ஒரு மாபெரும் டைனமோவைக் கட்டியெழுப்ப அவரது ஆட்களுடன் வேலை செய்தார்.


நிலத்தடியில் கேபிள் நிறுவவும்,


இறுதியாக அந்த வேலை நிறைவுற்றது. 1882 ஆம் ஆண்டு செப்டெம்பர் மாதம் 4ஆம் தேதி, எடிசன் சமிக்ஞை செய்ய பிரதான சுவிட்ச் இயக்கப்பட்டது.
வரலாற்றில் முதன்முறையாக மின்சாரம் மூலம் ஒளிரும் ஒரு நகரத்தைக் காண்கிறோம்.


அது ஒரு வெற்றியானது, அதனால் டாம், மென்லோ பார்க்கில் கட்டப்பட்ட மின்சார ரெயில்பாதை போன்ற பிற விஷயங்களில் கவனத்தைத் திருப்பினார்.
நகரங்களுக்கு இதுப் போன்றே விஷயங்கள் வேண்டும். குதிரை வண்டிகள் காலாவதியாகிவிட்டன.


அவரது குடும்பம் இன்னும் மென்லோ பார்க்கில் கோடைகாலத்தை கழித்தது. 1884 ல், மேரி எடிசன் டைபாய்ட் காய்ச்சலால் நோய்வாய்ப்பட்டார்.
ஐம் சாரி! மிகவும் வருத்தப்படுகிறேன். அவர் இறந்துவிட்டார்.
மென்லோ பார்க்கின் மீதிருந்த டாமின் நேசம் வெறுப்பாக மாறியது. அவர் தனியே நியூ யார்க்கிற்குத் திரும்பினார். மென்லோ பார்க்கில் இருந்த அவரது ஆய்வகம் சிதைந்து போனது.


டாம் எப்போதும் விருந்துகளைத் தவிர்த்தார். இப்போது அவரது தனிமை அவரை வெளியே செல்லத் தூண்டியது.
யார் அந்த பியானோ வாசிக்கும் பெண்?
மிஸ் மினா மில்லர். அவரது தந்தை ஓஹியோவில் ஒரு தொழிலதிபர்.


டாம் மீண்டும் காதல்வயப்பட்டார். 1886ஆம் ஆண்டு பிப்ரவரி 24, அன்று, அவர்கள் அக்ரோனில் மில்லர் இல்லத்தில் திருமணம் செய்துகொண்டனர்.


டாம் நியூ ஜெர்ஸியில் வெஸ்ட் ஆரஞ் பகுதியில் ஒரு புதிய ஆய்வகத்தைக் கட்டினார். மேலும் அருகிலேயே அவரது குடும்பத்திற்கு ஒரு வீட்டையும் வாங்கினார்.
நான் இந்த மின்சார காருக்கான சிறந்த பேட்டரிகளை உருவாக்க போகிறேன்.


1889 இல்…
பிரஞ்சு அரசாங்கம் பாரிஸ் சர்வதேச பொருட்காட்சியில். என்னை ஒரு விருந்தினராக கலந்துகொள்ள கேட்டுக்கொண்டுள்ளது.
ஓ, டாம்! செல்லலாம். நாம் மேரியனும் கூட அழைத்துச் செல்வோம்


இது விடுமுறைக்கு ஒரு நல்ல நேரம். என்னுடைய தொழிற்சாலைகள் மற்றும் நிறுவனங்களை நான் ஹென்றி வில்லார்ட் மற்றும் சில நண்பர்களுக்கு விற்றுவிட்டேன்.
இந்த விற்பனையில் இருந்து வந்தது எடிசன் ஜெனரல் எலக்ட்ரிக் கம்பெனி- இன்றைய ஜெனரல் எலக்ட்ரிக்.


ஐரோப்பா முழுவதிலும் உள்ள அரசாங்கங்கள் எடிசனை கௌரவித்தன. பிரஞ்சு மற்றும் மற்றவர்களுக்கு அவர் ஒரேபதிலை அளித்தார்.
திரு எடிசன், நான் உங்களை பிரஞ்சு லெஜியன் ஆஃப் ஹானர் ரிப்பன்களை கொண்டு அலங்கரிக்கிறேன்.
நன்றி. இந்த மரியாதை எனக்குரியது அல்ல, அமெரிக்காவிற்கு சொந்தமானது..




அக்டோபர் 21, 1929, மின்சார விளக்கின் 50 வது ஆண்டுவிழா ஆகும்.டாம் எடிசனுக்கு 82 வயதாகிவிட்டது அது விமரிசையாகக் கொண்டாடப்பட்டது.

உலகெங்கிலும் உள்ள மின் விளக்கை பயன்படுத்தும் எவரும் தாமஸ் ஆல்வா எடிசனின் மேதைக்கு நன்றி பாராட்ட வேண்டும்.

மக்கள் எதை மேதமை என்று அழைக்கிறார்களோ, அது கடின உழைப்பையே.

டாம் எடிசன் தனது பணியை எப்போதும் நிறுத்தவில்லை. ஒரு குறுகிய கால உடல்நலக்குறைவிற்குப்பிறகு 1931ல் காலமானார். அவரது வாழ்நாளில், இதுவரை எந்தவொரு மனிதருக்கு வழங்கப்பட்ட மிகப்பெரிய எண்ணிக்கையிலான 1,093 காப்புரிமைகள் அவருக்கு வழங்கப்பட்டது.

THE END